REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



வரதட்சிணை

படித்தவன், படிக்காதவன்என்ற பேதம் உள்ளவரைக்கும் வரதட்சிணைநிலைமாறுது.
-தந்தை பெரியார்



# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்



கலப்புமணம்

வெறும் காமஇச்சை யின் காரணமாக நடைபெறும் கலப்பு மணங்களை நான் ஆதரிக்கமாட்டேன்.
-அண்ணல் காந்தி

மலர்: 4 சென்னை 25—10—1979 வியாழன் (★) ❋ ● ❋ (★) வெளியூர் 26-10-1979 வெள்ளி இதழ்: 9

புரட்சிதலைவர் முன்னிலையில்

# க. அரங்கசாமி

தி. மு. க. எம். எல். ஏ.

# கழகத்தில் சேர்ந்தார்

சென்னை. அக். 25- குன்னூர் தொகுதி தி.மு க. சட்டமன்ற உறுப்பினர் க. அரங்கசாமி முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் இன்று கழகத்தில்சேர்ந்தார்.

க. அரங்கசாமி எம்.எல் ஏ. இன்று காலையில் முதல்வர் புரட்சித்தலைவரை அவரது இல்லத்தில் சந்தித்தார்.

தலைவருக்கு மாலையணிவித்து கழகத்தில் இணைந்தார்.

தி. மு. கழகத்தின் சந்தர்ப்பவாதப் போக்குக்கும், கருணாநிதியின் சுயநலத்திற்கும் கடுங்கண்டனம் தெரிவித்துள்ளார்.

அண்ணாவின் இலட்சியத்திற்காகப் பாடு படுவது முதல்வர் புரட்சித்தலைவரின் தலைமையில் உள்ள கழகம் தான் என்பதால் தி. மு. கழகத்திலிருந்து தான் விலகியுள்ளதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

புரட்சித்தலைவர் முன்னிலையில் அவர் கழகத்தில் இணைந்தபோது அமைச்சரின் பேரவைச் செயலர் முசிறிபுத்தன், தொழிலாளர் தலைவர் நீலகிரிபிரான்சிஸ் நீலகிரி திராவிடர்க்கழகத் தலைவர் கம்பர் ஆகியோர் உடனிருந்தனர்.

## அறிக்கை

க. அரங்கசாமி எம். எல். ஏ. விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தில் என்னை உறுப்பினராக இணைத்துக் கொள்கிறேன்.

என்னைப் போன்ற மிசா கைதிகளின் காயங்கள் ஆறும்முன், கலைஞர் சுயநலம் கருதி இந்திராகாந்தி கூட்டுக்கு ஏற்பாடு செய்து கொண்டார்.

அமைதியான தமிழகத்தில் அண்ணா பெயரில் நடைபெறும் அரசுக்கு இடையூறு உண்டாக்கும் தீய நோக்கத்துடன் காவல்துறையினரையும், அரசு ஊழியரையும் தூண்டி விட்டு தமிழகமக்களின்உடைமைக்கும் உயிருக்கும் ஆபத்து உண்டாக்கிக் கொண்டிருக்கிறார்.

அண்ணா கொள்கை அண்ணா அரசு என்பது போன்ற லட்சிய சிந்தனை ஏதுமில்லாமல் அவர் தனக்காக வாழ்கிறார்.

இந்தியத் துணைக் கண்டத்தில் பாபு ஜெகஜீவன்ராம் போன்ற தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவர் பிரதமராகும் வாய்ப்பினைக் கெடுக்கும் வகையில் அவரது முயற்சிகள் உள்ளன.

50 ஆண்டு காலம் தந்தை பெரியாரும் அண்ணாவும் அடித்தள மக்கள் முன்னேற்றத்துக்காக செய்த சேவையை இன்று தொடர்ந்து செய்து வருபவர் புரட்சித்தலைவரே!

சுயநலமும் சந்தர்ப்பவாதமும்நிறைந்த கருணாநிதியின் தி. மு. க. விலிருந்து விலகி இன்று அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தில் சேருகிறேன்.

இவவாறு க. அரங்கசாமி எம். எல். ஏ. அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

கிராமப்புற மருத்துவ மனைகளில்

இளம் மருத்துவ பட்டதாரிகளுக்கு

# வேலைவாய்ப்பு

## முதல்வர் புரட்சித்தலைவர் அறிவிப்பு

சென்னை, அக். 25- மாவட்ட - தாலுகா - கிராம மருத்துவமனைகளில் இளநிலை டாக்டர்களை (ஜூனியர் டாக்டர்கள்) நியமிக்கும் திட்டம் ஒன்று அமைச்சர் சவுந்தரராசனிடம் இருந்து வந்துள்ளது. இத்திட்டம் ஏற்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் பலத்த கரஒலிக்கு இடையே அறிவித்தார்.

சென்னை மருத்துவக் கல்லூரியில் பட்டம் பெற்ற பட்டதாரிகளுக்கு கல்லூரிப் பேரவை சார்பில் ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது

மருத்துவக்கல்லூரி பட்டம் பெற்றவர்கள் ஜூனியர் டாக்டர்களாக நியமிக்கப் படுவார்கள் என்று முதல்வர் அறிவித்தது இந்த மாணவர்கட்கு ஒரு வரப்பிரசாதமாக வரவேற்கப்பட்டுள்ளது.

பட்டம் பெற்றவர்களை முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்திப் பேசினார்.

இந்தப் பாராட்டு விழா தியாகராயர் நகரில் உள்ள சுவாமி சங்கரதாஸ் அரங்கத்தில் நடந்தது.

விழாவுக்கு அமைச்சர் சவுந்தரராஜன் தலைமை வகித்தார். அமைச்சரின் பேரவைச் செயலர் வெள்ளைச்சாமி, மருத்துவத் துறை இயக்குநர் ஞான தேசிகன், கல்லூரி முதல்வர் டாக்டர் வி. சிவராஜ் ஆகியோர் இந்த விழாவில் பேசினார்கள்.

முதல்வர் புரட்சித் தலைவர் பேசியதாவது:

மருத்துவத் துறையில் பட்டம் பெற்றவர்கள் இங்கே கூடிஇருக்கிறீர்கள்.

சிறிய கூண்டில் இருந்து பரந்தவெளிஎன்றுசொல்ல மாட்டேன்- அதை விடப் பரந்த வெளிக்கு வந்திருக்கிறீர்கள்.

கல்லூரியில் ஆசிரியர்கள்-முதல்வர் ஆகியோரின் கட்டுப்பாடு சிலருக்கு ஆத்திரத்தை ஏற்படுத்திஇருக்கலாம்.

இதுவரை பிறரால் கட்டுப்படுத்தப்பட்ட நீங்கள் இனிமேல் உங்களை நீங்களே கட்டுப்படுத்திக் கொண்டு மக்களுக்குப் பாடுபடச் செல்கிறீர்கள்.

### வாயார வாழ்த்துகிறேன்

அப்படிச் செயல்படச் செல்லும் உங்களை வாயார வாழ்த்துகிறேன். உளமார வாழ்த்துகிறேன்.

நோயற்ற வாழ்வுக்கு துணையாக இருங்கள்என்று வாழ்த்துகிறேன்.

நான் இந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ள முடியுமா என்ற நிலை காலையில் இருந்தது.

காய்ச்சல்- பேச முடியாமல் சளி-இருமல்- நேற்று முதல் சங்கடப்படுகிறேன். அப்படி இருந்தும் நேற்று பெருந்தலைவர் காமராசர் விழாவில் கலந்து கொண்டேன்.

நாட்டுக்கு உழைத்த உத்தமர்க்கு நன்றிகூறச் சென்றேன். இந்தகுதிக்கு ஆளாக்கியதற்கு நன்றி கூற நான் இந்த விழாவில் பங்குபெற வந்துள்ளேன். இந்த எண்ணமே உடல் நலத்தைத்தந்திருக்கிறது.

மருத்துவர்களும் வழக்கறிஞர்களும் அடிக்கடி வீட்டுக்கு வராமலிருக்க வேண்டும் என்று பழமொழி இருக்கிறது.

ஆனால் அப்படிப்பட்ட நிலையில் நம் நாடு இல்லை. மருத்துவர்கள் எத்தனை பேர் வந்தாலும் அவர்கள் தொண்டு தேவை என்ற நிலையில்தான் நாடு இருக்கிறது.

இங்கே வரவேற்புரை கூறியவர் ஒரு கோரிக்

(2-ம் பக்கம் பார்க்க)

- ★ அரசு ஊழியர்களுக்கு ரூ. 30 வரை சம்பள உயர்வு
- ★ முரண்பாடுகளை ஆராய சி. வி. ஆர். பணிக்கர் குழு
- ★ கிராமப்புற அரசு ஊழியர்களுக்கு வீட்டு வாடகைப்படி
- ★ மீண்டும் 'குடும்ப பயன் திட்டம்'
- ★ போலீசாருக்கு ரூபாய் 50 வரை சம்பள உயர்வு
- ★ கிராம அலுவலர்களுக்கு ஊதிய உயர்வு

## 7,50,000 ஊழியர்களுக்கு ரூ.15,00,00,000 சலுகைகள்

# கழக அரசு தரும் ஊதிய உயர்வு

## புரட்சித்தலைவர் சார்பில் நாஞ்சிலார் அறிவிப்பு

சென்னை, அக். 25-ஏழரை லட்சம் அரசு ஊழியர்களுக்கு 15 கோடி ரூபாய்க்கு சம்பள உயர்வை முதல்வர் புரட்சித் தலைவர் அளித்திருக்கிறார். இதனால் போலீசார் 50 ரூபாய் வரைசம்பள உயர்வு பெறுகிறார்கள். மேலும் பல சலுகைகளையும் அரசு அறிவித்துள்ளது.

முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில் நிதியமைச்சர் நாஞ்சிலார் இந்த சலுகைகளை அறிவித்தார்.

அரசு ஊழியர்களுக்கும் போலீசாருக்கும் சம்பள உயர்வை கழக அரசு அளித்துள்ளது.

இதனை முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில் நிதியமைச்சர் நாஞ்சிலார் வெளியிட்டார்.

இந்த சம்பள உயர்வினால் ஏழரை லட்சம் பேர் பயனடைவார்கள். ஆண்டுக்கு 21கோடிரூபாய் அதிகமாக செலவாகும்.

நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறியதாவது:-

தமிழக அரசு ஊழியர்கள், போலீசார் ஆசிரியர்கள், ஊராட்சி நிறுவன பணியாளர்கள் ஏழரை லட்சம் பேர் சார்பில் பல கோரிக்கைகள் அரசிடம் தெரிவிக்கப்பட்டன.

முதல்வர் புரட்சித் தலைவரும், தமிழக அரசும் இந்த கோரிக்கைகளை அனுதாபத்துடன் பரிசீலித்து இந்த ஊழியர்களின் பெரும்பாலான கோரிக்கைகளை ஏற்க இன்று நடந்த அமைச்சரவை கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

அரசு ஊழியர்களுக்கு விலைவாசிப்படி மாதம் 6 ரூபாய் முதல் 30 ரூபாய் வரை இந்த அக்டோபர் முதல் தேதியிலிருந்து உயர்த்தப்படுகிறது.

ஏற்கனவே இந்த ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இதே அளவுக்கு விலைவாசிப்படி உயர்த்தப்பட்டு இருக்கிறது.

கிராம அதிகாரிகளும், ஓய்வு ஊதியம் பெறுபவர்களுக்கும் விலைவாசிப்படி, தக்கபடி உயர்த்தப்படும்.

அலுவலர் சங்கங்கள், ஊதியக் குழுவின் அறிக்கையின் மீது காணும் முரண்பாடுகளை ஆராய்ந்து அரசுக்கு அறிக்கை தருவதற்காக சி.வி.ஆர். பணிக்கரை ஒருவர் குழுவாக அரசு நியமித்துள்ளது. அவர் ஊழியக் குழு அறிக்கையையும் அலுவலர் சங்கங்கள் கோரிக்கைகளையும் விரிவாக ஆராய்ந்து அரசுக்கு அறிக்கை தருவார்.

மத்திய அரசு அண்மையில் அறிவித்துள்ளவாறு ஓய்வு ஊதியம் அறிவிப்பதற்கான விதிமுறைகள் அலுவலர்கட்கு சலுகை தரும் முறையில் 1-10-79 முதல் மாற்றியமைக்கப்படும்.

இப்போது வீட்டு வாடகைப்படி எதுவும் பெறாத

(2-ம் பக்கம் பார்க்க)

### தமிழக சட்டசபை கூடுகிறது

சென்னை, அக். 25- தமிழ்நாடு சட்டசபைக் கூட்டம் நாளை (வெள்ளிக் கிழமை) காலை 10 மணிக்கு கூடுகிறது. தமிழக சட்டமன்ற மேலவை மாலை 4 மணிக்குக் கூடுகிறது.

நாளை மறுதினம் (சனிக்கிழமை) முதல் சட்டசபை வழக்கம் போல் காலை 9 மணிக்குக் கூடும்.

### மத்திய புதிய நிதி மந்திரி கே. கோபால்?

புதுடெல்லி, அக். 25 மத்திய நிதி இலாகா பொறுப்பை பகுகுணா ராஜினாமாவுக்கு பிறகு பிரதமா சரண் சிங்கே கவனித்து வருகிறார். நிதி இலாகாராஜாங்க அமைச்சர்களாக கே. கோபாலையும், நாதுராம்மிர்தாவையும் நியமிக்குமாறு ஜனதிபதியை பிரதமர் கேட்டுக் கொண்டுள்ளார். கே. கோபால் நாடாளுமன்ற விவகாரராஜாங்க அமைச்சராக இருக்கிறார். தமிழகத்தைச் சேர்ந்தவர். நாதுராம்மிர்தா விவசாய ராஜாங்க மந்திரியாக இருப்பவர். ராஜஸ்தானைச் சேர்ந்தவர். இருவரும் காங்கிரஸ் காரர்கள்

# கல்வீச்சு-அமளி!

# ராஜ்நாராயண் படுகாயம்

## தலையில் 2 இடத்தில் தையல் சிகிச்சை

கோட்டா அக், 25-கல்வீச்சினால் மக்கள் கட்சித் தலைவர் ராஜ்நாராயணனுக்கு தலையில் பலத்த காயம் ஏற்பட்டது. 2 இடத்தில் அவருக்குத் தையல் போட்டு சிகிச்சை அளிக்கப்பட்டது.

ராஜஸ்தான் மாநிலம் கோட்டா என்ற இடத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் லோக்தளக் கட்சித் தலைவர் ராஜ்நாராயணன் பேசினார்.

மேடையில் மத்திய மந்திரி மவுரியாவும் லோக்தள பிரமுகர்களும் இருந்தனர்.

ராஜ்நாராயணன்பேசும் போது அவரை எதிர்த்து கூட்டத்தினர் குரல் எழுப்பினார்கள்.

ராஜ்நாராயணன் விடவில்லை. தொடர்ந்து ஆவேசமாகப் பேசினார்,

மேடையை நோக்கி கூட்டத்தினர் கல்வீசினார்கள். செருப்புகளும் சரமாரியாக வீசப்பட்டன.

உடனே மேடையிலிருந்த லோக்தளத் தலைவர்கள் தலையணைகளை கைகளில்எடுத்துக்கொண்டு கேடயம் போல் பிடித்து கற்களையும் செருப்புக்களையும் ஓடி ஓடித் தாங்கினர்.

மற்றும் 200 தொண்டர்கள் கைகளில் தடிகளை ஏந்தியபடி, கல்வீசிய கும்பலை அடித்து விரட்டிக் கொண்டிருந்தனர்.

மொத்தத்தில் அங்கு ஒரு யுத்தமே நடந்து கொண்டிருந்தது!

போலீசாரால் இந்த அமளியை கட்டுப்படுத்த முடியவில்லை.

இந்த கலாட்டாவில் ராஜ்நாராயணன் தலையில் பலத்தகாயம் ஏற்பட்டது. மவுரியாவுக்கும் தலையில் படுகாயம் ஏற்பட்டது.

எனவே மவுரியாவினால் கூட்டத்தில் பேசமுடியவில்லை. இருவரும்கோட்டாவிலுள்ள மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனா. ராஜ்நாராயணன் தலையில் 2 இடங்களில் தையல் போடப்பட்டன. மவுரியாவுக்கு 3 தையல்கள் போடப்பட்டன.

ஆர்ப்பாட்டம் நடத்தியவர்களில் 5 பேர் லோக்தளத் தொண்டர்கள் அடித்த அடியில் படுகாயம் அடைந்தனர். அவர்களும் சிகிச்சை பெறுகிறார்கள்.

# சட்டமன்ற கழக உறுப்பினர்கள் அவசரக்கூட்டம்

சட்டமன்ற கழக உறுப்பினர்கள் கூட்டம் தமிழக முதல்வர் புரட்சிதலைவர் அவர்கள் தலைமையில் 26-10-79 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு கழக சட்டமன்ற உறுப்பினர்கள் அலுவலகத்தில் நடைபெறும் அனைவரும் இதனையே அழைப்பாக ஏற்று தவறாது கலந்து கொள்ளக் கோருகிறேன்.

துரை. கோவிந்தராசன் எம்.எல்.ஏ.
தலைமைக் கொறடா.

## நாஞ்சிலார் அறிவிப்பு

(முதல் பக்கத் தொடர்ச்சி) கிராமப்பகுதிகளில் பணி புரியும் அரசு ஊழியர்கள், போலீசார், பள்ளி ஆசிரியர்கள் உள்ளாட்சி நிறுவன ஊழியர்கள் ஆகியோருக்கு கிராமப்பணி ஊக்கப்படியாக மாதமொன்றுக்கு ரூ. 10 அளிக்கப்படும். இது ஒரு புதிய சலுகையாகும்.

1974-ம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் செயல்பட்டு வந்து 1975-ல் கைவிடப்பட்ட குடும்பபயன்திட்டத்தின் படி மாதமொன்றுக்கு ரூ.10வீதம் அரசு அலுவலர் பணம் செலுத்திவந்தால் 30 ஆண்டு ஆனபின் 10ஆயிரம் ரூபாய் பெறலாம் என்ற திட்டம் மீண்டும் செயல்படுத்தப்படும். இதில் அலுவலர்கள் தங்கள் விருப்பப்படிசேரலாம்.

### பிரச்சினை தீர்வு

ஏற்கனவே அறிஞர் அண்ணா அவர்கள் பிறந்த நாளன்று அறிவிக்கப்பட்ட காவல் துறையினர் தீயணைப்புத் துறையினர் ஆகியோருக்கு மாதம் ஒன்றுக்கு 'விபத்து'படியாக 20 ரூபாய் கிடைக்கும். போலீசார் முதல் இன்ஸ்பெக்டர்கள் வரை இதனைப் பெறுவார்கள்,

அலுவலர் சங்கங்கள் அரசின் கவனத்துக்கு கொண்டு வர வேண்டிய குறைகளை கூட்டு ஊழியர்கள் பணிக்குழுவிடம் தெரிவித்து உடனடியாக தக்க நிவாரணம் பெறமுயற்சிப்பார்கள் என்றுஅரசு எதிர்பார்க்கிறன.

இதனல்அரசுக்குஅடுத்த 5 மாத காலத்திற்கு 7 கோடி ரூபாய் செலவாகும்.

ஊழியர்களின் பெரும்பாலான கோரிக்கைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது.

பிரச்சினைகள் உடனுக்குடன் விரைவில் தீர்க்கப்படவேண்டும் என்ற நல்ல எண்ணத்தில்தான் இப்பொழுது தெரிவிக்கப்படுகிறது. சட்டசபையில் தெரிவிப்பதற்காக காத்திருக்க வேண்டும் என்பதில்லை.

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.

### நெடுமாறன்-குமரி அனந்தன் கட்சிகள் காங்கிரசுடன் இணைப்பு:

# கழகம்-காங்கிரஸ் தேர்தல் உறவு: காங்கிரஸ் கட்சிகளுக்கு 10 தொகுதி

## புரட்சித்தலைவரை சந்தித்தபின் தேவராஜ் அர்ஸ் பேட்டி

சென்னை, அக் 25-குமரி அனந்தனின் காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ், நெடுமாறனின் தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் ஆகிய கட்சிகள் இந்திய தேசிய காங்கிரசுடன் இணைய வாய்ப்பு உள்ளதாக தேவராஜ்அர்ஸ் கூறினர். அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்துக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் தேர்தல் உடன்பாடு ஏற்பட்டிருப்பதாக அவர் சொன்னர்.

இதுபற்றி அகில இந்திய தேசிய காங்கிரஸ் கட்சித்தலைவர் தேவராஜ் அர்ஸ் மேலும் கூறியதாவது:

தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறனும், காந்தி காமராஜ் காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தனும் என்னை சந்தித்துப் பேசினர்கள்.

இந்த இரு கட்சிகளும் பிறகு காங்கிரஸ் கட்சியுடன் இணைவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது.

அனைத்திந்திய அண்ணா திமு கழகத்துடன் ஜனதா கட்சிக்கு ஏற்கெனவே உடன்பாடுஏற்பட்டுள்ளது.

இப்பொழுது ஏற்பட்டுள்ள புதிய உடன்பாடு இரண்டு கட்சிகளுக்கும் இடையே உள்ள உடன்பாடு. இப்பொழுது ஏற்பட்டுள்ளது ஓர் உடன்பாடு தான். தொகுதிகள் போன்ற விஷயங்கள்பிறகு முடிவு செய்யப்படும்,

தங்கள் தங்கள் அடிப்படைக்கொள்கை, இலட்சியங்களை விட்டுக்கொடுக்காமல் இந்த உடன்பாடு ஏற்பட்டுள்ளது.

எங்கள் கட்சி நிலச்சீர் திருத்தத்தில் அதிக அக்கறை கொண்டுள்ளது. அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகமும் அதேகருத்தைத் தான் கொண்டிருக்கிறது. முக்கிய பிரச்சினைகளில் இரு கட்சிகளுக்கும் ஒருமித்த கருத்துக்கள் இருப்பதால் பாதிப்புஎதுவும் ஏற்படாது.

இந்தஉடன்பாடுநாடாளுமன்ற தேர்தலுக்கு மட்டுமே பொருந்தும். பாண்டிச்சேரி சட்டசபை தேர்தலுக்கும், மாநில சட்டசபைத் தேர்தலுக்கும் பிறகு முடிவுசெய்யப்படும்.

தேசிய அளவில் காங்கிரஸ் லோக்தளக் கட்சி, அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் இரு கம்யூனிஸ்ட் கட்சிகள் ஆகியவை ஒன்றாக இணைந்து செயல்படும் சூழ்நிலைகளை உருவாக்க முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறேன்.''

இவ்வாறு தேவராஜ் அர்ஸ் கூறினர்.

# இளம் பட்டதாரிகளுக்கு வேலைவாய்ப்பு (1-ம்பக்கத் தொடர்ச்சி)

கையைச் சொல்லாமல் சொல்லி அதற்குப் பதில் சொல்லவேண்டிய கட்டாயத்தில் ஆளாக்கி தன் ராஜதந்திரப் பணியை முடித்திருக்கிறார்.

இப்படிப்பட்ட அவரது திறமையை நான் போற்றுகிறேன். ஒரு மணி நேரம் இங்கே பேசிக்கொண்டு இருந்த போது இந்தக் கருத்தை அப்போது அவர் சொல்லவில்லை.

உங்கள் முன் சொன்னல் நான் மறுக்க மாட்டேன் என்று கருதி இங்கே சொல்லியிருக்கிறார்.

யாருடைய எதிர்ப்பு வந்தாலும் நல்லதைச் சொல்பவர்கள், உண்மையைச் சொல்லத்தகுதி பெற்றவர்களாக இருக்கவேண்டும் இப்படிப்பட்டவர்கள் நாட்டுக்குமிகமிகத்தேவை

இடத்திற்குத் தகுந்தாற்போலப் பேசி கைதட்டல் பெறுவதற்காக நான் பேசவில்லை.

உங்களைப் பாராட்ட எனக்குத் தகுதி இருக்கிறதா என்ற ஐயம் வருகிறது.

5 ஆண்டுகள் படித்து விட்டு தொண்டு செய்ய செல்லும் உங்களைப் பாராட்டும் நான் எந்தப் பட்டத்தையும் பெறவில்லை.

### மக்கள் தந்த பட்டம்

மக்கள்தந்த முதலமைச்சர் பட்டம் தவிர வேறு எந்தப்பட்டமும் பெருதவன் நான்.

வேறு எந்த தகுதியையும் பெற்றேனில்லை.

ஆனல் உள்ளம் திறந்து பேசும் துணிச்சல் பெற்றவன். அந்த வகையில் நாட்டு மக்களை சந்தித்து வருகிறேன்,

வாழ்க்கையில் நான் பட்ட கஷ்டங்களை நினைக்கும் போது உங்களது திறமையை அறிய முடிகிறது.

நான் நடித்த படங்களில் சண்டைக்காட்சிகள் அதிகம் இடம் பெற்று இருக்கும்.

நாடகத்தில் நடித்துக் கொண்டு இருந்தபோது எனது இடது கால் துண்டு ஆன நிலைக்கு ஆளானேன்.

டாக்டர் நடராஜன் அதைக் குணமாக்கி வாழ்க்கை தந்தார். இப்படி மருத்துவர் திறமையை நானே உணர்ந்தவன்.

### பேசுவதற்கு பட்டபாடு

நான் சுடப்பட்டபோது எனது தொண்டையின் இடப்பக்கம் பேசத்தகுதி அற்று செயலற்று இருந்தது.

முழுமூச்சுடன் மூச்சை இழுத்து பேசமுற்பட்டால் 'வா' என்ற வார்த்தைக்கு மேல் வார்த்தை வராது.

தண்ணீர் குடித்தால் மூக்கில் வழியும். கோழை வந்து தடுக்கும்தண்ணீரை விழுங்குவதே கஷ்டமாக இருக்கும் அப்படி இருந்த என்னை மனிதனுக ஆக்கிய மருத்துவத் துறையினரை வியக்கிறேன்.

என்குரல்வளை பக்கக் கழுத்துக்குப் பின்னல் எலும்பில் இருந்த குண்டு துண்டை எடுக்கமருத்துவர் பட்ட கஷ்டத்தை நான் உணர்வேன்.

நான் அப்போதுடாக்டர் வேணுகோபாலின் பாதுகாப்பில்அனுமதிக்கப்பட்டு இருந்தேன்.

எத்தனை டாக்டர்கள் என்னைச் சுற்றி இருந்தனர் என்னைப் பாதுகாக்க விரும்பினர்கள் அவர்கள் யார் யார் என்றும் சரியாகத் தெரியாது

அவர்களில் ஒரிருவரைத் தான் தெரியும். டாக்டர் ராமமூர்த்தி, டாக்டர் நடராஜன், டாக்டர் நந்தகோபால் ஆகியோரைத்தான் தெரியும்.

### இன்னமும் தோட்டா துண்டுகள்

இன்னமும் தோட்டாக்களின் சில துண்டுகள் என் எலும்பில் இருக்கின்றன.

அப்போதுநான்டாக்டர்களிடம் நான் எப்போது பேச முடியும் என்று கேட்டேன்.

இயற்கையாகத் தான் பேசும் நிலைவரும் என்று சொன்னலும் மருத்துவத் துறையினரும் முயற்சி செய்தார்கள்.

புண் ஆறிவிட்டது வீட்டுக்குப்போகலாம் என்று டாக்டர் நடராஜன் கூறினர். பேசமுடியவில்லையே என்று அவரிடம் கூறினேன்.

பழகப் பழகப் பேச்சு வரும் என்று சொன்னர் இப்படிச் சொன்னதும் டாக்டர்கள் அக்கறை காட்டினர்கள்.

இப்படிப்பட்ட மருத்துவ வசதி கிராமங்களில்உள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு கிடைக்க வேண்டும் இப்படிப்பட்ட வசதி கிடைக்காத நிலையில் இருக்கிறார்கள்.

மருத்துவக்கல்லூரி முதல்வர் கூறிய யோசனைக்கு சாதகமான ஒரு கோப்பினை மருத்துவத்துறைப் பொறுப்பை ஏற்றுள்ள அமைச்சர் சவுந்தரராசன் அனுப்பி இருக்கிறார்.

இந்தக் கோரிக்கை விரைவில் ஏற்றுக்கொள்ளப்படும்.

(கைதட்டல்)

நீங்கள் அனுப்பியது இவர்களுக்குத் தெரியுமா என்று சவுந்தரராசனிடம் கேட்டேன். தெரியாது என்று அவர் கூறினர்.

நல்ல உள்ளங்கள் நல்லதைச் சொல்லும். நல்லது நடைபெறும்.

பட்டம் பெற்றுள்ள மாணவர்கள் கிராமப் புறங்களைப் பார்க்க வேண்டும்.

கிராமங்களில் இருந்து வந்தவர்களுக்கு அது தெரியும். ஆனல் நகர்புறத்தில் இருந்து வந்தவர்கள் கிராமங்களுக்குச் சென்று கிராமப்புற நிலையைப் பார்க்க வேண்டும்.

### விஷம் இறக்கும் மாயக்கல்

கருநாடகத்தில் இருந்து வந்த ஒரு பிரதிநிதி ஒரு கருத்தை நேற்று கூறினர். விஷக்கடிக்கு ஒரு குறிப்பிட்ட கல்லை கடிவாயில் வைத்தால் விஷம் இறங்கி விடுவதாகச் சொன்னர்,

அந்தக்கல்லை அங்கேயே உடைத்து வைக்க வேண்டும் என்று கூறினர்.

விஞ்ஞான ரீதியில்இதை சோதனை செய்து பார்க்க வேண்டும். இது உண்மையாக இருந்தால் அந்த வசதியை எல்லா இடத்திலும் பயன்படுத்தலாம்.

ஆனல் வேறு வகையில் விளம்பரத்திற்காக அல்லது பணம் பறிக்க என்ருல் அது பற்றியும் கவனிக்க வேண்டும்.

உங்கள் அறிவை, ஆற்றலை, திறமையை இந்த மக்களுக்கு பயன்படுத்தும் தொண்டர்களாக- தியாகிகளாக நீங்கள் மாற வேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

இன்றைய சூழ்நிலையில் மருத்துவர்கள் வருமானம் எந்த வகையில் இருக்கிறது என்று பார்க்க வேண்டும்.

நல்ல வருவாய் உள்ளவர்கள் சிலர் இருக்கலாம் ஆனல அரசுமருத்துவமனைகளில் பணியாற்றும் மருத்துவர்களுக்கு அப்படிப்பட்ட வருமானம் இல்லை. நிதிநிலைக்கு ஏற்ப அரசு கொடுத்து வருகிறது.

### எங்களால் முடிந்த கடமை

அரசின் ரூ. 850 கோடி வருமானத்தில் சுமார் 98 கோடியை மருத்துவத்துறைக்கு ஒதுக்கியுள்ளோம். 10 சதவிகிதத்திற்கு மேல் ஒதுக்கினேம் முடிந்தவரை கடமையைச் செய்கிறோம்.

நாட்டுமக்களை நோயற்ற மக்களாக உருவாக்குங்கள். அவர்களுக்கு நல்வாழ்வு தாருங்கள்

பட்டம் பெற்ற நீங்கள் மக்களுக்கு நல்வாழ்வு தருபவர்களாக தியாகம் செய்ய முன்வரவேண்டும்.

வாய்ப்புக் கிடைக்கும் போது மேலும் படித்து பட்டம் பெறுங்கள்.

வெளிநாடு சென்று பட்டம் பெற்றுல் அந்தப் பயன் முழுமையையும் தமிழகத்திற்குப் பயன் படுத்துங்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினர்.

### கல்லூரி முதல்வர் தெரிவித்த திட்டம்

சென்னை மருத்துவ கல்லூரி முதல்வர் சிவராஜன் பேசும் போது ஜூனியர் டாக்டர் திட்டம் பற்றி கூறியதாவது:

தமிழகத்தில் 16மாவட்டங்களில் ஏறத்தாழ 48 ஆயிரம் மருத்துவப்படுக்கைகள் இருக்கின்றன.

மருத்துவக்கல்லூரிமருத்துவமனைகளில் தவிரஏனைய மருத்துவமனைகளில்ஹவுஸ் சார்ஜன், மேல்பட்டபடிப்பு போன்ற இளநிலை மருத்துவர்கள் இல்லை.

தாலுகா, மற்றும் கிராம மருத்துவமனைகளில் இந்த வசதி இல்லை.

ஆகவே மருத்துவப் பட்டதாரிகளை பயிற்சி முடிந்தவுடன் மாவட்ட தாலுகா மருத்துவமனைகளில் இளம் டாக்டர்களாக நியமிக்கலாம். இவர்களுக்கு குறிப்பிட்ட தொகை ஸ்டைபண்டாக தரலாம் என்று கூறினர்.

### சவுந்தரராசன் பேச்சு

அமைச்சர் சவுந்தரராசன் பேசுகையில் கூறியதாவது:-

ஜூனியர் டாக்டர் திட்டம் ஏற்கக்கூடிய திட்டம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் சொல்லிவிட்டார்.

சென்னை மருத்துவக் கல்லூரியை பட்டமேற்படிப்புக்கு கேந்திரமாக மாற்றும் திட்டத்தை அரசு ஏற்று இருக்கிறது.

சென்னை பொது மருத்துவமனைக்கு ரூ 42லட்சம் செலவில் வைத்தியக் கருவி ஒன்று வாங்க அனுமதிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராசன் கூறினர்.

## சரண்சிங் தமிழகம் வருகை மீண்டும் தள்ளி வைப்பு

சென்னை, அக், 25-பிரதமர் சரண்சிங்கின் தமிழக வருகை மீண்டும் தள்ளி வைக்கப்பட்டுள்ளது.

சரண்சிங் நாளை முதல் இரண்டு நாட்கள் (வெள்ளி, சனி) தமிழ் நாட்டில் சுற்றுப்பயணம் செய்வதாக இருந்தது.

அடுத்த மாதம் (நவம்பர்) மூன்ருவது வாரத்தில் தமிழ் நாட்டில் சுற்றுப்பயணம் செய்வார்.

சரண்சிங் ஹெலிகாப்டர் விமானத்தில் சுற்றுப் பயணம் செய்யவிருந்தார். வானிலை காரணமாக ஹெலிகாப்டர் செல்லுவதில் இடைஞ்சல் ஏற்படும் என்பதால் சுற்றுப்பயணம் தள்ளிப்போடப்பட்டிருக்கிறது.

சரண்சிங்கின் தமிழக வருகை ஒத்தி வைக்கப்படுவதுஇது 3வதுதடவையாகும்.

### சரவணமூர்த்தி இல்லத் திருமணம்

## அமைச்சர் அரங்கநாயகம் வாழ்த்து

'அண்ணா' நாளிதழ் நிருபர்எம் சரவணமூர்த்தியின் தங்கை வரதாம்பாள் என்னும் லீலாவதிக்கும் பெரம்பூர் ஆர். குப்புசாமியின் மகனும், டி. ஐ. டியூப்ஸ் புராடக்ட்ஸ் நிறுவனத்தில் பணி புரிபவருமான கே. வஜ்ஜிரவேலுவிற்கும் நேற்று (24ம் தேதி) காலை 9 மணிக்கு அயன்புரம் மேட்டுத் தெருவில் 16ம் எண்ணுள்ள தட்சிண நாடார் சங்க திருமண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

தமிழக கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் நேரில் சென்று மணமக்களை வாழ்த்தினர் மின்சாரத் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன்,

(3-ம் பத்தி பார்க்க)



# பாக். கிரிக்கெட் அணி வருகை ஜனவரி 13-ல் சென்னை டெஸ்ட்

புதுடெல்லி, அக். 25-பாகிஸ்தான் கிரிக்கெட் அணிஅடுத்த மாதம்(நவம்பர்) இந்தியாவுக்கு வருகிறது. இந்திய கிரிக்கெட் அணிக்கும், பாகிஸ்தான் கிரிக்கெட் அணிக்கும் நவம்பர் 21ம் தேதி தொடங்கி 6 போட்டிகள் நடக்கின்றன. சென்னையில் ஜனவரி 13ம்தேதி நடக்கிறது.

இந்திய கிரிக்கெட் வீரர்களுடன் விளையாடுவதற்காக பாகிஸ்தான் கிரிக்கெட் அணி அடுத்த மாதம் 5-ம் தேதி டெல்லி வந்து சேருகிறது.

இந்திய அணிக்கும், பாகிஸ்தான் அணிக்கும் இடையே 6டெஸ்ட்போட்டிகள் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டு இருக்கிறது.

பாகிஸ்தான் அணியின் ''கேப்டன்'' ஆக அசீப் இக்பால் நியமிக்கப்பட்டு இருக்கிறார். முன்னுள் கேப்டன் முஸ்டக்முகமது இந்த அணியில் இடம் பெறவில்லை

பாகிஸ்தான் அணியில் இடம்பெற்றுள்ள மற்ற விளையாட்டு வீரர்களின் பெயர் விவரங்கள் வருமாறு:

மஜீத்கான் (துணைகேப்டன்), வாசிம்பாரி, ஜாகீர் அப்பாஸ், சாதிக்முகமது, இம்ரான்கான், இக்பால் காசீம், ஜாவீது மியான்டட், வாசிம் அசன்ராஜா, சிக்கந்தர் பக்த், முடாசர் நகர், அப்துல்காதிர் தஸ்லிம் ஆரிப், இதேசம்சுதீன், அப்துல் ரசீப், தலாத் மீர்சா.

இந்த அணியினருக்கும், இந்திய கிரிக்கெட் அணிக்கும் சென்னை டெஸ்ட்போட்டி ஜனவரி மாதம் 13ம்தேதி தொடங்கி 18ம் தேதி முடிகிறது.

இந்திய சுற்றுபயணத்தை முடித்துக் கொண்டு பாகிஸ்தான் அணிஜனவரி மாதம் 27ம் தேதி வங்காள தேசத்துக்கு பயணமாகிறது.

# முரண்பாட்டு களஞ்சியம்

தி. மு. க. 71-ம் ஆண்டு இந்திரா காங்கிரசோடு கூட்டு சேர்ந்தபோது 25 இடங்களைப் பெற்றது. அ.தி.மு.க. 76-ம் ஆண்டு இந்திரா காங்கிரசோடு கூட்டு சேர்ந்து 19 இடத்தைத்தான் பெற்றது.

- முன்பு கருணாநிதி

இந்திரா காங்கிரசுக்கு நாங்கள் 23 இடம் கொடுத்து இருப்பதைக் குறை கூறுகிறார். இதைக் கேட்க அவர் யார்? 23 இடம் அல்ல; 24 இடம் கூட கொடுப்போம்.

-இப்போது கருணாநிதி

''முரண்பாட்டுக் களஞ்சியம்! உன் பெயர் தான் மு. கருணாநிதியோ?

(8ம் பக்கத் தொடர்ச்சி)

சட்டத்துறை அமைச்சர் கே. நாராயணசாமி, செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர்.எம்.வீ. ஆகியோர் மணமக்களுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பினர்கள்.

ஏராளமான உறவினர்களும், பத்திரிகையாளர்களும், நண்பர்களும்வந்து மணமக்களை வாழ்த்தினர்கள்.



# ஓநாய்க்கு விற்கும் தரகன்

" இந்திரா காங்கிரசுக்கு நாங்கள் 23 இடங்கள் கொடுத்திருப்பதைக் குறை கூறுகிறார்.

ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுத கதையாக இருக்கிறது".

- கருணாநிதி

ஆட்டின் அருமை வளர்த்தவனுக்குத் தான் தெரியும்! ஓநாய்க்கு விலைக்கு விற்கும் தரகனுக்கா தெரியும்?

★ ராணுவம், போலீசாருக்கு உள்ள கடமையை நினைவு கூர்ந்து நடக்க வேண்டும் ★ தமிழக போலீஸ் சிறந்தது என அனைத்து மாநிலங்களும் பாராட்டியதை மறக்கலாமா? ★ தொழிற்சங்கங்களைப்போல போராட்டமா?
★ வேலைநிறுத்தம், உண்ணாவிரதம் பற்றிய முன்னறிவிப்பு உண்டா?
★ பேச்சுவார்த்தையை விட்டு விட்டு அரசியல் கட்சித் தலைவர்களைச் சந்திப்பதேன்?

# போலீசார் போராட்டத்தை அரசியல் போராட்டம் ஆக்குவதா?

## நாஞ்சிலார் கடும் கண்டனம்



சென்னை, அக். 25- போலீசாரின் போராட்டத்தை அரசியல் போராட்டமாக மாற்றுவதிலேயே எதிர்க்கட்சியினர் அக்கறை கொண்டிருக்கிறார்களே தவிர, போராட்டத்தைக் கைவிடுங்கள், உங்கள் சார்பில் நாங்கள் முதல்வரைச் சந்தித்து பிரச்னையைத் தீர்த்து வைக்கிறோம் என்று எந்த எதிர்க்கட்சித் தலைவராவது சொல்லியிருக்கிறார்களா என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் காட்டமாகக் கேட்டார்.

வேலைநிறுத்தம் நடக்க இருப்பது பற்றி அரசுக்குத் தகவல் தரவில்லை. முறைப்படிதான் போராட்டத்தை துவக்கினார்களா? குறைகளை எடுத்துச் சொல்லிவிட்டு மாவட்டந்தோறும் போலீசாரை தூண்டிவிட்டு விட்டு. அரசியல்வாதிகளைசந்திப்பது நியாயமாஎன்று நிதியமைச்சர் நாஞ்சிலார் கடுமையாக கூறினார்.

முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில் அரசு அலுவலர்களுக்கான சலுகைகள் குறித்து தமிழக அரசின் முடிவுகளை நிதியமைச்சர் நாஞ்சிலார் வெளியிட்டார்.

பின்னர் நிருபர்களுக்கு அளித்த பேட்டியின் போது நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறியதாவது:

அரசு ஊழியர்களுக்கு வழங்கப்படும் அகவிலைப்படி திட்டத்தின் கீழ்ஏறத்தாழ ஏழரை லட்சம்அரசு அலுவலர்கள் பயன் பெறுவார்கள்.

போலீஸ்காரர்கள்வேலையில் ஈடுபடாமல் கிளர்ச்சியில் ஈடுபட்டிருப்பதை மக்கள் கவனித்துப் பார்க்கிறார்கள். இதை அவர்கள் உணர்ந்தாக வேண்டும்.

எனக்கு நயினார்தாஸ் யாரென்று தெரியாது. நான் அவரை எப்போதும் சந்தித்தது இல்லை.

### கலாட்டா வீரர்கள்

எழு எட்டு வருடங்களுக்கு முன்பிருந்தே இந்த நயினார் தாஸ் தனிச் சங்கம் ஆரம்பிக்க முயற்சித்ததாகவும், ஆனால் அது முடியாமல் போனதாகவும் எனக்கு தற்போது தகவல் கிடைத்திருக்கிறது.

சட்டையை கழற்றி தூக்கி எறிந்துவிட்டு வெளியே வாருங்கள் என்று கூறி, முதல்வருக்கு பாதுகாப்பு கொடுக்காதீர்கள் என்று கூறுவதைஎந்த அளவுக்கு பொதுமக்கள் வரவேற்கிறார்கள் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்?

போலீசார் இது போல் செய்வார்கள் என்று நாங்கள் கனவிலும் நினைக்குட பார்க்கவில்லை. அவர்கள் ஒழுங்காக இருந்து தங்கள்காரியத்தை சாதித்திருக்கலாம்.

எந்த ஒரு மனிதனும் தன் வாழ்க்கையில் கலாட்டாநடக்கவேண்டும் வீரனாக மாற வேண்டும் என்று நினைக்கமாட்டான் ஒழுங்காக வேலைக்குப் போகவேண்டும் தன் பிள்ளைகள் பள்ளிக்கு ஒழுங்காகச் செல்லவேண்டும் அமைதியான வாழ்க்கை நடத்த வேண்டும் என்றுதான் விரும்புவான்.

ராணுவம், போலீஸ் இவைகளில் உள்ளவர்களுக்கு தனி கடமை, ஒழுக்கம் இருக்கிறது. அவர்களுக்கென்று சில கட்டுப்பாடுகளும் உண்டு.

நாங்கள் எதுவும் செய்ய முடியாது என்று உதறித் தள்ளிவிடும் நிலைக்கு அவர்கள் வரக் கூடாது. இதை அவர்கள் உணர்ந்தாக வேண்டும்.

இன்றைக்கு இருக்கிற அரசியல் கட்சிகள் போலீசாரை பார்த்து உங்களின் பதவி, தரம், முக்கியத்துவம் கருதி போராட்டம் நடத்த வேண்டாம். போராட்டத்தைகைவிட்டு விடுங்கள். உங்கள்சார்பில் நாங்கள் முதல்வரை சந்தித்துப் பேசுகிறோம் என்று யாராவதுசொல்லி இருக்கிறார்களா?

### மரியாதை பெருமை

ஏன் முதலமைச்சரே அவர்களிடம் பேசக்கூடாது என்கிறார்களே தவிர, நீங்கள் போராட்டத்தைநிறுத்துங்கள். இதன் மூலம் நீங்கள் சாதிக்க நினைப்பது தவறு. முதலமைச்சரை சந்தித்து பேசலாம் என்று எந்த அரசியல் கட்சியாவது சொல்லியதா என்றால் இல்லை

குறைகளை எடுத்துச் சொல்லிவிட்டு மாவட்டந்தோறும் சென்று ஒரு சிலரை தூண்டிவிட்டுவிட்டு பின்னர் அரசியல் கட்சித் தலைவர்களை போய் போலீசார் சந்திக்கிறார்கள் என்றால் என்ன முறை?

தொழிற்சங்கங்களைப்பற்றிச் சொல்ல விரும்பவில்லை.

நமது தமிழ்நாட்டின் மரியாதைக்கும் பெருமைக்கும் உரியதாக இருந்த இந்த போலீஸ்துறையைப் பற்றிச் சொல்கிறேன்.

தமிழ்நாட்டுப் போலீசைப்பற்றி பிற மாநிலங்களில் மிகப்பெருமையாகப் பேசுகிறார்கள். அதைநாம் கெடுக்க வேண்டாம்.

ஸ்டிரைக் செய்யப் போகிறவர்கள் அரசாங்கத்தை முறையாக அணுகி இருக்கலாம். அவர்கள் அதிகாரிகளையும் சந்திக்கவில்லை. டி. ஐ ஜி. யை பார்த்தார்களா. பேசினார்களா என்பது நமக்குத் தெரியாது.

ஏதாவது குறைகள் இருந்தால் குறைகளைத் தீர்க்க வேண்டியவர்களை அணுகி சொல்லி இருக்கலாம்.

அதை விட்டு விட்டு எல்லோரையும் தூண்டிவிட்ட பிறகு அவர்களை துன்புறுத்துகிறார்கள் என்று சொல்வது எல்லாம் நல்லதா?

முதல்வர் ஒவ்வொரு கூட்டத்திலும் பேசும் போது காவலர்களை எவ்வளவு உயர்வாக பேசியிருக்கிறார்.

இந்த காவலர்களையே எதிர்க்கட்சியினர் எவ்வளவு மோசமாகவிமர்சித்து இருக்கிறார்கள் என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும்.

மதுரையில் எட்வர்டு என்ற பெயர் கொண்ட இன்ஸ்பெக்டர் சுடப்பட்டு இறந்தபோது அந்த காவலருக்கு அனுதாபம் தெரிவித்து எதிர்க்கட்சியினர் பேசினர்.

### முதல் முறையாக

இதுவரை பொது மக்களில் சுடப்பட்டு யாராவது இறந்தால்தான் எதிர்க்கட்சியினர் அனுதாபம் தெரிவிப்பது வழக்கம்.

ஆனால் முதல்முறையாக எட்வர்ட் இறந்த போது அனுதாபம் தெரிவித்து சட்டமன்றத்தில் பேசினார்கள் எதிர்க்கட்சியினர்.

அதற்காக சட்ட மன்றத்திலேயே அவர்களுக்கு நன்றி கூறினேன்.

இனிமேல் மக்களை ஏமாற்ற முடியாது. அவர்கள் நன்கு புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஏதோ கும்பலை கூட்டி வைத்துக் கொண்டு நல்ல பலம்இருக்கிறது என்று முடிவுஎடுக்க முடியாது.

இன்றைக்கு ஒரு ஏழைத் தொழிலாளி கூட சொல்கிறார், இவ்வளவு ஆர்ப்பாட்டங்களும், சதிகளும் இந்த அரசை கவிழ்க்க செய்யப்படும் செயல்கள் என்று.

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.

மதுரையில் தி. மு கழக தொழிற் சங்கத்தைக் கல[illegible] களோடு முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் ராமலிங்கம் இணைந்தபோது எடுக்கப்பட்ட படம்.

---

கருணாநிதியின் கையாள்

# நயினார்தாஸ் கைது பிரிட்டோ தலைமறைவு ஸ்டிரைக் பிசுபிசுப்பு

நெல்லை, அக். 25- போலீசார் போராட்டம் என்ற பெயரில் கருணாநிதியின் தூண்டுதலால் வன்முறைக்கு வித்திட்டு வரும் சப் இன்ஸ்பெக்டர் நயினார் தாசை போலீசார் கைது செய்துள்ளனர்.

போலீஸ்துறைக்கு என்று மூன்று சங்கங்களை தமிழக அரசு அங்கீகரித்தது. ஆனால் கருணாநிதியின் தூண்டுதலால் நயினார் தாசும், பிரிட்டோவும் ஒரு போட்டிச் சங்கத்தை பொம்மை சங்கத்தை உருவாக்கி புகழ்பெற்ற தமிழக போலீஸ்துறையில் குழப்பம் விளைவித்துக் களங்கம் தேடினார்கள்.

நயினார்தாஸ் மீதும், பிரிட்டோ மற்றும் சிலர் மீதும் மதுரை குற்றவியல் போலீசார் வழக்கு பதிவு செய்து இருந்தார்கள்.

இந்திய குற்றவியல் சட்டம் 117-வது பிரிவு (அரசுக்கு விரோதமாக போலீசாரை தூண்டி விடுதல்) 120-ஏ- (அரசுக்கு எதிராகச் சதி செய்தல்) ஆகிய பிரிவுகளின் கீழ் வழக்கு பதிவு செய்யப்பட்டது.

### தலைமறைவு

நயினார்தாசும், பிரிட்டோவும் தலைமறைவானார்கள். போலீசார் அவர்களை வலை வீசித் தேடினார்கள்.

நெல்லை பிராந்திய டி ஐ. ஜியான துரைராஜ் மாவட்ட சூப்பரின்டெண்ட் பெருமாள், உதவிசூப்பரின்டெண்டுகள் மாணிக்கம், நடராஜன், தமிழ்நாடு சிறப்புக் காவல் படை அதிகாரி வேலுச்சாமி, நெல்லை போலீஸ் இன்ஸ்பெக்டர் ஆகியோர் நேற்று பகல் ஒரு மணிக்கு நயினார் தாசைக் கைது செய்தார்கள்.

வீட்டுக்குச் சென்று விட்டு மீண்டும் தலைமறைவாகலாம் என்று கருதிய நயினார் தாசை அதிகாரிகள் அவரது வீட்டிலேயே கைது செய்தனர்.

### ரிமாண்டு

நெல்லை மாவட்ட ஜுடிஷியல் தலைமை மாஜிஸ்டிரேட் முன்னிலையில் நயினார்தாஸ் ஆஜர் படுத்தப்பட்டார். நயினார் தாஸ் இன்று வியாழன் காலை சென்னைக்குக் கொண்டுவரப்பட்டார்.

சென்னை நகர குற்றவியல் போலீசாரும் நயினார் தாஸ் மீது வழக்கு பதிவு செய்துள்ளார்கள்.

எனவே நயினார் தாஸ் சென்னைபெருநகர தலைமை மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் ஆஜர் செய்யப்பட்டு ரிமாண்டுக்கு அனுப்பப்படுகிறார்.

### தி. மு. க. உறவு

கருணாநிதியின் கையாளான நயினார்தாஸ் சட்டமன்ற முன்னாள் தி. மு. க. உறுப்பினரான பத்மநாபனின் உறவினர்.

### பணிகள் தீவிரம்

தமிழகத்தில் எல்லா மாவட்டங்களிலும் காவல் நிலையங்களில் வழக்கம் போல் வேலைகள் தீவிரமாக நடைபெறுகிறது.

வேலை நிறுத்தம் நடைபெறுவதற்கான அறிகுறிகள் எங்கும் இல்லை.

---

## சென்னை நகரில் கழகத் தொடர் கூட்டங்கள்

**இராயபுரம்**
28 10-79 அமைச்சர் கே. ஏ. கே.
29-10-79 அமைச்சர் ஆர். சௌந்திரராசன் பேரவைச் செயலர் ப. கோ. கிட்டு
31-10-79 அமைச்சர் எஸ். இராமச்சந்திரன் பேரவைச் செயலர் எஸ். எம். துரைராஜ்

**இராதாகிருஷ்ணன் நகர்**
28-10-79 அமைச்சர் ப. குழந்தைவேலு பேரவைச் செயலர் ஐசரிவேலன்
29-10-79 அமைச்சர் கே. ராஜாமுகமது பேரவைச் செயலர் ஐசரிவேலன்
31-10-79 அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் பேரவைச் செயலர் ஐசரிவேலன்

**துறைமுகம்**
28-10-79 அமைச்சர் செ. அரங்கநாயகம் பேரவைச் செயலர் அருணாசலம்
29-10-79 பேரவைச் செயலர் அ. வெள்ளைச்சாமி திருப்பூர் மணிமாறன்
31-10-79 அமைச்சர் சி. பொன்னையன் பேரவைச் செயலர் ஜெயவேலு

**பெரம்பூர்**
28 10-79 அமைச்சர் நாஞ்சிலார்
29-10 79 அமைச்சர் எஸ். இராகவானந்தம் பேரவைச் செயலர் ஜெகதீசன்
31-10-79 அமைச்சர் செ. அரங்கநாயகம் பேரவைச் செயலர் அருணாசலம்

**பூங்கா நகர்**
28-10-79 அமைச்சர் ஆர். சௌந்திரராசன் பேரவைச் செயலர் எஸ். எம். துரைராஜ்
29 10-79 அமைச்சர் சுப்புலட்சுமி ஜெகதீசன் பேரவைச் செயலர் முசிறிபுத்தன்
31-10-79 அமைச்சர் கே. ராஜாமுகமது பேரவைச் செயலர் ஜெகதீசன்

**புரசை**
28-10-79 அமைச்சர் எஸ். இராகவானந்தம் பேரவைச் செயலர் ப, கோ. கிட்டு
29-10 79 அமைச்சர் கே. ஏ. கே.
31-10-79 அமைச்சர் ப. குழந்தைவேலு

**அண்ணா நகர்**
28 10-79 அமைச்சர் எஸ். டி. எஸ். பேரவைச் செயலர் வெள்ளைச்சாமி
29-10-79 அமைச்சர் சி. பொன்னையன்
31-10-79 அமைச்சர் எஸ். இராகவானந்தம்

**எழும்பூர்**
28-10-79 அமைச்சர் கா. காளிமுத்து
29-10-79 அமைச்சர் ப. குழந்தைவேலு
31-10-79 அமைச்சர் எஸ். டி. எஸ். பேரவைச் செயலர் அ. வெள்ளைச்சாமி

**சேப்பாக்கம்**
28-10-79 அமைச்சர் ஆர். எம். வீ.
29-10-79 அமைச்சர் எஸ். டி. எஸ்.
31-10-79 அமைச்சர் கே. ஏ. கே.

**திருவல்லிக்கேணி**
28 10-79 அமைச்சர் எஸ். இராமச்சந்திரன்
29 10-79 அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட்
31-10-79 அமைச்சர் எஸ். டி. எஸ்.

**ஆயிரம்விளக்கு**
28-10-79 அமைச்சர் சி. பொன்னையன்
29-10-79 க. ராசாராம்
31-10-79 அமைச்சர் கா. காளிமுத்து

**திருவொற்றியூர்**
28-10-79 அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட்
29-10-79 அமைச்சர் எஸ். இராமச்சந்திரன்

**தியாகராய நகர்**
28 10 79 துரை கோவிந்தராசன் பேரவைச்செயலர்நாஞ்சில் வின்சென்ட்
29- 10-79 அமைச்சர் சௌந்தரபாண்டியன்
31-10 79 அமைச்சர் ஆர். எம். வீ.

**சைதாப்பேட்டை**
28-10 79 திருப்பூர் மணிமாறன் இராமபத்திரன்
29-10 79 அமைச்சர் கா. காளிமுத்து
31-10 79 க. ராசாராம்

**மயிலாப்பூர்**
28-10-79 க. ராசாராம்
29 10-79 துரை கோவிந்தராசன் பேரவைச்செயலர்நாஞ்சில்வின்செண்ட்
31 10 79 அமைச்சர் ஆர். சௌந்தரபாண்டியன்

**வில்லிவாக்கம்**
28 10-79 அமைச்சர் கே. ராஜாமுகமது
29 10-79 அமைச்சர் ஆர். எம். வீ.
31 10- 9 அமைச்சர் சுப்புலட்சுமி ஜெகதீசன்

திருப்பூர் இரா மணிமாறன் எம்.எல்.ஏ,
கொள்கை பரப்புச் செயலாளர்.
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

# அண்ணா



சென்னைப் பெருநகர்
குடிநீர் வழங்கல்
கழிவு நீரகற்று வாரியம்
MMWSSB/ NT/
S/6430/79

## ஒப்பந்த அறிவிப்பு

பொருள்: சென்னைப்பெருநகர் குடிநீர் வழங்கல் கழிவு நீரகற்று வாரியம் கழிவுநீரகற்று சம்பந்தப்பட்ட பணிகள்.

சென்னைப் பெருநகர் குடிநீர் வழங்கல் கழிவு நீரகற்று வாரியத்துக்காகவும் மற்றும் அதன் சார்பாகவும் கீழே குறிப்பிட்டுள்ள பணிக்குமூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தங்கள் கீழே குறிப்பிட்டுள்ள நாளில் மாலை 14·00 மணி வரை (அலுவலக கடிகாரப்படி) பெற்றுக் கொள்ளப்படும்.

விடுமுறையானால் அடுத்த வேலை தினத்தன்று அதே மணிக்கு பெற்றுக்கொள்ளப்படும்.

பெற்றுக் கொள்பவர்:
காண்டிராக்ட் இன்ஜினியர், செ.பெ.கு.வ.வா., பிளாட் நம்பர் 67, முருகேச நாயக்கர் காம்ப்லக்ஸ், கிரீம்ஸ் சாலை, சென்னை-600 006.

ஒப்பந்தப் பத்திரங்கள் கிடைக்கும் இடம்:
பிளாட் எண். 3, கதவு எண் 5, கிரீம்ஸ் சாலை, சென்னை-6ல் உள்ள பணம் செலுத்தும் கவுண்டர்.

ஒப்பந்தப்பத்திரங்கள்வாங்க பணம் செலுத்தும் விதம்:
பணமாகவோ அல்லது டிராப்ட் வடிவிலோ.

ஒப்பவைப்புத் தொகை செலுத்தும் விதம்:
பணமாகவோ அல்லது டிராப்ட் வடிவிலோ அல்லது தேசிய மயமாக்கப்பட்ட வங்கியிடமிருந்து பெறும் 'வங்கி உத்திரவாதம்' வடிவிலோ.

செலுத்தும் இடம்:
பிளாட் எண் 3, கதவு எண் 5, கிரீம்ஸ் சாலை, சென்னை-6ல் உள்ளபணம் செலும் கவுண்டர்.

டிராப்ட் முகவரியாளர்:
காண்டிராக்ட் இன்ஜினியர், செ.பெ.கு.வ.வா.

காண்டிராக்ட் எண்ணும் வேலையின் பெயரும்: CNT/SEW/I F/54B/79 ஸ்ரீநகர் காலனியில் நீரேற்று நிலையம் கட்டுதல்-ஒப்பந்தம்எண் பி.டபிள்யூ.சி. 44 (P.W.C. No.44ல்)எஞ்சியுள்ளவேலைகளை பூர்த்தி செய்தல்.

ஒபபவைப்புத் தொகை ரூ 7700.

ஒப்பந்தப் பத்திரங்களின் விலை; ரூ. 50,

ஒப்பந்தங்களை ஏற்றுக்கொள்ள கடைசி நாள் 7-11-79.

ஒப்பந்த பத்திரங்கள் விற்பனைக்குக் கிடைக்கும் தேதி 16-10-79 முதல் 5-11-79 வரை.

வேலை முடிப்பதற்கான காலம்: 12 மாதங்கள்.

ஒப்பந்தங்கள் காண்டிராக்ட் இன்ஜினியர் அல்லது அவரால் அங்கீகரிக்கப்பட்ட ஓர் அதிகாரியால் ஒப்பந்தங்கள் திறக்கும் நேரத்தில் ஆஜராகியுள்ள டெண்டர்தாரர்கள் அல்லது அவர்களின் அங்கீகாரம் பெற்ற பிரதிநிதிகள் முன்னிலையில் குறிப்பிட்டுள்ள தேதியன்று மாலை 14-30 மணிக்கு பகிரங்கமாக திறக்கப்பட்டு சப்தமிட்டு வாசிக்கப்படும்.

ஒப்பந்தங்கள் மூடி முத்திரையிடப்பட்ட உறைகளின் மேல் 'வேலையின் பெயர் - டெண்டர் கடைசி தேதியை' குறிப்பிட்டு அனுப்பப்படவேண்டும். மேற்படி ஒப்பவைப்புத்தொகை இல்லாமல் பெற்றுக் கொள்ளப்படும் ஒப்பந்தங்கள் பரிசீலனை செய்யப்படமாட்டாது. ஒப்பந்தங்கள் அதற்காக நியமிக்கப்பட்டுள்ள பத்திரங்களில் மட்டுமே சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

ஒப்பந்தப் பத்திரத்தின் விலை எக்காரணம் கொண்டும் திருப்பித் தரப்படமாட்டாது. ஒப்பந்தப் பத்திரங்களை தபாலில் அனுப்பும்போது ஏற்படும் கால தாமதத்திற்கோ அல்லது காணாமல் போவதற்கோ சென்னை பெருநகர் குடிநீர் வழங்கல் கழிவுநீரகற்று வாரியம் பொறுப்பேற்காது.

ஒப்பந்ததாரர்கள் அறிவிப்பில் கண்டுள்ள எல்லா விளக்கங்கள் மற்றும் தேவைகளுக்கும் மற்றும் ஒப்பந்தப்பத்திரத்தில் கண்டுள்ள விளக்கங்கள் மற்றும் தேவைகளுக்கும் அதையடுத்த வழிமுறைகளுக்கும் இணங்கி ஒப்புக்கொள்பவராக இருக்க வேண்டும். சென்னை பெருநகர் குடிநீர் வழங்கல் கழிவு நீரகற்று வாரியத்திற்கு எந்த ஒரு அல்லது எல்லா ஒப்பந்தங்களையும் எந்தவித காரணமும் கூறாமல் நிராகரிக்க அதிகாரம் உண்டு.

மே. ப. பொறியாளர்
(பொறுப்பு)
சென்னை பெருநகர் குடிநீர் வழங்கல் கழிவு நீரகற்று வாரியம் (திட்டம், வடிவமைப்பு ஒப்பந்தம்)
dipr-53405/79-15

## இ. காங்கிரஸ் தொழிற்சங்கத் தலைவர் விலகினர்

திண்டுக்கல், அக். 25
இந்திரா காங்கிரஸ் தலைமையில் இயங்கி வந்த மதுரை மாவட்ட தேசிய கைத்தறிநெசவாளர் யூனியன் இனி இந்திரா காங்கிரஸிலிருந்து விலகி நெடுமாறன் தலைமையில் உள்ள, தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்துகைத்தறிநெசவாளர் நலனுக்குபாடுபடும் என்று மதுரை மாவட்ட தேசிய கைத்தறி நெசவாளர் யூனியன் தலைவர் சின்னளப்பட்டி இராமு. இராமசாமி அறிவிக்கின்றார்.

## டெண்டர் அறிவிப்பு

எண்:
SCB/DN. iii/628 78/D2
தேதி 16-10-79

தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத் தலைவர், அவர்கள் சார்பில் அவர்களுக்காக, கீழ்க்காணும் பொருள்களை சப்ளை செய்வதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள், கவரின் மேல், சப்ளை செய்யப்பட வேண்டிய ஸ்டீலின் பெயர் டெண்டர், டெண்டர் தேதி ஆகிய விவரங்களை தெளிவாக குறிப்பிட்டு 16-11-79 பிற்பகல் 3 மணிவரை வரவேற்கப்படுகின்றது.

1. மாநகராட்சி (பழைய) டிவிஷன் எண் 51 ல் கேசவ பிள்ளை பூங்கா திட்டத்தில் பல்வேறு விட்டங்களில் (Diameters) ஸ்டீல் சப்ளை செய்தல்,

2. சப்ளை செய்யப்பட வேண்டிய உத்தேச மதிப்பீடு 6 லட்சம்.

3. டேவணித் தொகை ரூ. 6,000.

டெண்டர் குறிப்புகள் 5-11-79 முதல் 15-11-79 வரை எல்லா அலுவலக தினங்களிலும் காலை 11மணி முதல் பிற்பகல் 4 மணிவரை கீழ் கையொப்பமிட்டுள்ளவரின் அலுவலகத்திலிருந்து, சென்னை-7, சிண்டிகேட் பாங்கின், புரசைவாக்கம் கிளையில் கணக்கு எண் 6242ல் ரூ25 மற்றும் வரிகள் சேர்த்து (திருப்பியளிக்கப்படமாட்டாது) செலுத்தி அதற்கான சலானை சமர்ப்பித்து பெற்றுக்கொள்ளலாம். டெண்டர்கள் அதே தினம் பிற்பகல் 3.05 மணிக்கு கீழ்க்கையொப்பமிட்டவரால் திறக்கப்படும்.

(ஒ-ம்) நிர்வாகப்பொறியாளர்
SCB டிவிஷன் iii

# திசை மாறிய பறவைகள்

திரைப்படங்கள் பொழுது போக்கிற்காக எடுக்கப்படுபவை என்பதை மாற்றி புத்துலகம் சமைப்பதற்காகவும், புரட்சிக்கருத்துக்களை விதைப்பதற்காகவும் என்ற நிலையை உருவாக்கியது பேரறிஞர் அண்ணாவும், புரட்சித்தலைவரும், அவர்கள் அணியினரும் தான்!

கொள்கைகளையே முழுமையாக வலியுறுத்தி, பிரச்னைகளைச் சுற்றியே கதையும், பதாபாத்திரங்களும் சென்று கொண்டிருந்தால் படம் பார்ப்பவர்களுக்கு சலிப்பு ஏற்பட்டு விடும்.

அப்படியின்றி கொள்கையை ஏற்க மறுப்பவர்கள் கூட 'என்னதான் இருக்கிறது... பார்க்கலாம்' என வந்து கதை உரையாடல், பாடல், காட்சியமைப்பு. கதாபாத்திரப் படைப்பு ஆகியவைகளைக் கண்டு கொள்கையை ஏற்றுக் கொண்டு திரும்பும் வகையில் அண்ணாவின் படைப்புகளும், புரட்சித் தலைவர் நடித்து உருவாக்கிய படங்களும்இருந்தன.

பேரறிஞர் அண்ணாவினால் 'புவியரசு' என்று புனைபெயர் சூட்டப்பட்டு 'திராவிடநாடு' இதழில் பொருளாதாரக் கட்டுரைகள் எழுதியவர் தான் 'திசை மாறிய பறவைகள்' படத்திற்கு கதை-வசனம் எழுதி டைரக்ட் செய்துள்ள எஸ். ஜெகதீசன் என்கின்ற உண்மை இப்போதைய இளைய தலைமுறையினர் பலருக்கு தெரிந்திருக்காது.

அண்ணாவின் ஆசியையும், புரட்சித்தலைவரின் வாழ்த்தையும் பெற்று, அமைச்சர் ஆர். எம். வீ. யினால் மணிப்பயல், இதயக்கனி மூலம் அறிமுகப் படுத்தப்பட்ட எஸ். ஜெகதீசனின் 25 ஆண்டுகால அனுபவத்தையும் இந்தப் படத்தில் காணமுடிகிறது.

காதல் ரசமானது... என்பதைமாற்றி அண்மையில் வெளிவந்த பல படங்கள் வரசமாக்கி விட்டன! புதுமை என்ற பெயரில் எதைச் சொல்லுவது எதைச் சொல்லக்கூடாது என்றில்லாமல் எல்லாவற்றையும் சொல்லலாம் என்ற நிலையைச் சிலர் உருவாக்கி வருகின்றனர்.

அந்தத் திசையிலிருந்து மாறிச் சிந்தனைப் பறவையைப் பறக்கவிட்டு, குடும்பத்தோடு பாாத்து மகிழும் படியான நல்ல கதையும், உரையாடல்களும் அமைத்து ஒரு தரமான படத்தைஉருவாக்கித் தந்ததற்காக எஸ்.ஜெகதீசனைப் பாராட்டவேண்டும்.

''சேத்திலே வீசினுக்கூட ஒண்ணுக்கு நூறு திருப்பிக் கொடுக்குற நெல் மணியைப் போன்றவ அம்மாநீ.

''விஷம்னு தெரியாம சாப்பிட்டாஅது தலைவிதி. தெரிஞ்சு சாப்பிட்டா தற்கொலை. தெரிஞ்சே தப்பு செய்யணுமா?''

''ஒரு வாய்தண்ணி அள்ளிக் குடிக்கிறவுங்களுக்காக ஓடுற ஆறு நிக்காதும்மா, ஈசனுக்குகண்ணைக்கொடுத்தவனும் ஒரு தாழ்த்தப்பட்டவன் தான். அவன் மகனுக்கு பெண்ணை கொடுத்தவனும் தாழ்த்தப்பட்டவன்தான். கீழ்ஜாதின்னு ஒதுக்கியிருந்தா நமக்கு ஒரு நாயன்மாரும், ஆழ்வாரும் கிடைச்சிருப்பாங்களா? ஜாதி வேற்றுமை பார்க்கக் கூடாது என்பதனால்தானே ஆதிசங்கரருக்கு முன்னாலே தாழ்த்தப்பட்டவனாக வந்து ஈசன் அருள் புரிந்நார்''.

''அடுத்தவர்கள் கண்ணீரைத் துடைப்பதற்காக தனது ரத்தத்தை சிந்துபவன்தான் உண்மையான கிறிஸ்துவன்''

''பக்திக்கு மந்திரம் முக்கியம் இல்லேம்மா... மனசு தான் முக்கியம்''

இப்படி கதை என்ற தங்கத்தில் பதிக்கப்பட்ட மணிமணியான கருத்துக்கள் ஒளி வீசுகின்றன.

தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவள் என்று தெரிந்ததும் பூஜை அறைக்குள் அழைக்கும் அன்னையிடமிருந்து விலகிச் சென்று, ''நான் வரலாமாம்மா?'' என்று கங்கா கேட்கும் இடம்...

மரணத்தோடு போராடும் பாட்டியின் முன்பு கன்னிகாஸ்திரீயாக அமர்ந்து முருகன்பாடலைப் பாடுவது...

தன்னைக்கெடுக்கநினைத்தவனுக்கும் பணம்கொடுத்து உதவி செய்வது- குஷ்டரோகிக்கு சிகிச்சை செய்து வளர்த்தவர்கள் பட்டினியால் சாகக்கூடாது என்பதற்காக அக்ரகாரத்தில் உள்ள பெண்களிடம் கங்கா வாதாடுவது...

ஆகிய இடங்கள் மிகவும் உருக்கமாக உள்ளன. முடிவு எதிர்பாராதது!

படப்பிடிப்பிற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடங்கள் அருமை! பாலகிருஷ்ணன் ஒளிப்பதிவும், விஸ்வநாதன் இசையமைப்பும் அப்படித்தான்!

சுமலதா வெள்ளுடை அணிந்து கன்னிகாஸ்திரீயாக அமைதியாக வந்து பிரமாதமாகநடித்துள்ளார் ஜி.சீனிவாசன்கதாபாத்திரமாகவே மாறிகண்கலங்க வைத்து விடுகிறார். எம். என். ராஜம் அன்னையாக பொருத்தமாக அழுத்தமாக நடித்து பாராட்டுப் பெறுகிறார்.

சரத்பாபுவிடம் நடிப்பு இருக்கிறது. அதற்காக நமது தமிழை இந்த அளவுக்கு அவர் சித்ரவதை செய்ய வேண்டுமா?

குமுதினி, சுந்தர்ராஜன் வி.எஸ், ராகவன் ஆகியோர் நடிப்பு மனதைத் தொடுகிறது. உசிலைமணி, தயிர் வடை தேசிகன், சுப்பையா ஆகியோர் சிரிப்பூட்டுகின்றனர்.

தொழில் நுணுக்கத்தில் இன்னும் சற்று கவனம் செலுத்தியிருந்தால்இந்தப் படம் மேலும்அருமையாக இருந்திருக்கும், தெளிந்த நீரோடையாக இருந்த கதையில் கொள்ளை, கடத்தல் ஆகியவைகளைநுழைக்காமல் இருந்திருக்கலாம்!

'அட்ரா' பாடல் காட்சியையும் சிலைகளை மாற்றி மாற்றிக் காட்டுவதையும் தவிர்த்திருக்கலாம்.

கடைசி காட்சியில் மாண்ட கங்காவை பாவாடை, தாவணி-வெள்ளுடை ஆகியவைகளில் காண்பித்திருப்பது குரங்குகள் பூமாலையைப் பிய்ப்பது ஆகியவை நல்ல நயம்.

மொத்தத்தில்-
சிறகடித்து உயரே பறக்கும் வண்ணப் பறவை.

-நாகை தருமன்

### எக்ஸ்ரே

### ஒளிப்பதிவாளர் ராஜாராம்

பாலகிருஷ்ணன் அருமையாக ஒளிப்பதிவு செய்துள்ளார்.

இது ஒரு காமன்மேன் படம். வெரிகுட் பிக்சர்-வெரி, வெரி நீட் பிக்சர்.

ரொம்ப நாட்களுக்குப் பிறகு ஒரு நல்ல படத்தைப் பார்த்த திருப்தி ஏற்பட்டது.

முப்பதே நாட்களில் இவ்வளவுநன்றாகபடத்தை உருவாக்கியுள்ள ஜெகதீசனுக்கு ''ஹேட்ஸ்ஆப்''

### டைரக்டர் கே. சங்கர்

ஜெகதீசன் கதை, வசனம் எழுதி டைரக்ட் செய்துள்ள இந்தப் படத்தை நான் அணு அணுவாக ரசித்தேன். ஒவ்வொரு பிரேமிலும் அவருடைய அனுபவ முத்திரை தெரிகிறது.

பழைய பிரச்னைகள் என்றாலும் இன்னமும்நாட்டில் உள்ள சாதி வேற்றுமை போன்ற பல முக்கிய பிரச்னைகளை துணிச்சலாக புதுமையான முறையில் படமாக்கி நாட்டுக்குத் தேவையான நல்லதொரு படமாகத் தந்துள்ளார்.

காட்சிகளும், பாத்திரப் படைப்பும் மனதைத் தொடும்படி உள்ளன. சில நல்ல கருத்துக்களை வலியுறுத்திப் படமாக்கும் போது சலிப்பு ஏற்பட்டு விடும். ஆனால் இந்தப் படம் முழுமையும் சலிப்பேற்படாதபடி விறுவிறுப்பாக- அதே சமயத்தில் விரசமில்லாமல் படமாக்கி உள்ளதற்குப் பாராட்ட வேண்டும்.

இந்துமதம், கிறிஸ்தவ மதம் ஆகியவைகளைப் பற்றி எழுதி உள்ளவை சிறப்பாக உள்ளன எந்த மதத்தையும்உயர்த்தியோ தாழ்த்தியோ குறிப்பிடாமல் அவற்றின் சிறப்பினை படமாக்கியுள்ளது அருமையாக உள்ளது. எல்லா தரப்பினரையும் திருப்தி படுத்தும் வகையில் குடும்பத்தோடு நல்லதொரு படத்தைபார்த்ததிருப்தியை தருகின்ற படமாக உள்ளது.

ஜெகதீசனுக்கு பிரமாதமான ஒரு எதிர்காலம் இருக்கிறது.

### எம். என். நம்பியார்

நல்லதொரு மலையாளப் படத்தை பார்த்ததுபோல் மன நிறைவைத் தருகின்ற படம்.

நான் அதிகமாக படம் பார்ப்பதில்லை. ஆனால், இந்தப் படத்தை மீண்டும் பார்ப்பேன். அந்த அளவுக்கு மொத்தத்தில் எல்லாமே ரொம்ப நல்லாயிருக்கு. எனக்கு பிடிச்ச படம்.

புதுப் பெண்ணாக இருந்தாலும் சுமலதா நன்றாக நடித்திருக்கிறது.

ஜெகதீசன் பார்த்தா பூனை மாதிரி இருப்பார். அவரா இவ்வளவுபிரமாதமாக டைரக்ட் செய்திருக்கிறார் என்று நம்பவே முடியவில்லை. பூனைமாதிரி உள்ளவுங்களை யெல்லாம் நம்பக் கூடாது என்பதற்கு அவரும், இந்தப் படமும் உதாரணம்.

பொதுவா இந்தப்படம் அமைதியா எல்லாரும் ரசிக்கும்படியா இருந்தது குறிப்பிடத்தக்கது.

## விஜயன் நடிக்கும் புதியபடம்

ரேவதி மூவிசார் 'தெய்வீகப் பறவைகள்' என்ற பெயரில் வண்ணப் படம் ஒன்றைத் தயாரித்து வருகின்றனர்.

இதற்கான படப்பிடிப்பு வெள்ளியன்று காலை 10 மணிக்கு ஏவி. எம். ஸ்டுடியோ ஒலிப்பதிவுக் நடைபெற்றது. கவிஞர் கண்ணதாசன் தலைமையில் ராஜ்கண்ணு துவக்கிவைத்தார்.

ஜி. சீனிவாசன், விஜயன் திருமுருகன், விஜயேந்திரன், விகடம் வாசன், பண்டரிபாய், சதிஸ்ரீ, லட்சுமிஸ்ரீ, ராஜி, மனோரமா ஆகியோருடன்ராஜராஜன், பொன்னி, ரஞ்சித் குமார், வசுமதி, ராஜா, விசித்ரா ஆகிய புதுமுகங்களும் நடிக்கின்றனர்.

இராமலிங்கம் கதைக்கு பவுன்ராஜ் திரைக்கதை வசனம் எழுதுகிறார். சங்கர் கணேஷ் இசையமைக்கிறார். பெஞ்சமின் ஒளிப்பதிவு செய்கிறார்.

ஏ. பி. ஜெகதீஷ் டைரக்ட் செய்கிறார்.

## நம்பிராஜனாக கண்ணன்

சோலார் கம்பைன்ஸ் தயாரிக்கும் 'தெய்வத் திருமணங்கள்' படத்தில் வள்ளியின் தந்தை நம்பிராஜன் வேடத்தில் கே. கண்ணன் நடிக்கிறார்.

ப. நீலகண்டன், கே. சங்கர், காமேஸ்வரராவ ஆகிய மூவர் டைரக்ட் செய்கின்றனர்.

ஸ்ரீதேவி வள்ளியாகவும் விஜய்பாபு முருகனாகவும் நடிக்கின்றனர்.

## கவிதையான திரைப் படம்?

-எக்ஸ்-ரே-
நாஞ

## ஆலந்தூர் - தாம்பரம்
## கும்மிடிப்பூண்டி - பொன்னேரி
## வாக்காளர் பட்டியல்

ஆலந்தூர் சட்டமன்றத் தொகுதி வாக்காளர் பட்டியல் ஆலந்தூர் துணைபதிவாளர் அலுவலகத்திலும்

தாம்பரம் சட்டமன்றத் தொகுதி வாக்காளர் பட்டியல் சிட்லபாக்கம், பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்திலும்,

கும்மிடிப்பூண்டி சட்டமன்றத் தொகுதி வாக்காளர் பட்டியல், கும்மிடிப்பூண்டி, தாலுகா ஆபீசிலும்,

பொன்னேரி சட்டமன்றத் தொகுதி வாக்காளர் பட்டியல் பொன்னேரி தாலுகா அலுவலகத்திலும்,

பொதுமக்கள் பார்வைக்காக வைக்கப்பட்டிருக்கிறது. பொதுமக்கள் அவற்றைப் பார்த்து பயன் பெறுமாறுகேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்,
தலைமை நிலயச் செயலாளர்.

## மத்திய கால்நடை வளர்ப்புப் பண்ணை

ஆவடி (அலமாதி) சென்னை-54

1-12-79 தேதி முதல் 31-3-80 முடிய உள்ள காலத்திற்கு கீழ்காணும் பொருள்களை சப்ளை செய்வதற்கான முத்திரையிட்ட விலை ஒப்பங்கள் வெள்ளைத்தாளில் வரவேற்கப்படுகின்றன. விலை ஒப்பங்கள், இயக்குனர், மத்திய கால்நடை வளர்ப்புப் பண்ணை, ஆவடி (அலமாதி) சென்னை-54 அவர்கள் விலாசத்திற்கு 15-11-79 பிற்பகல் 3மணிக்கு முன்னதாக வந்து சேரும்படி அனுப்பப்பட வேண்டும். முத்திரையிட்ட கவர்களின் மேல் ''Quotation for the supply of calf feed'' என்று தெளிவாக குறிப்பிட வேண்டும். விலை ஒப்பங்கள் அதே தினம் பிற்பகல் 4மணிக்கு திறக்கப்படும்.

| தேவைப்படும் பொருள்கள் | 4 மாதத்திற்கு தேவைப்படும் உத்தேச அளவு |
|---|---|
| மஞ்சள் சோளம் | 2 மெட்ரிக் டன்கள் |
| எள்ளு புண்ணுக்கு | 2 மெட்ரிக் டன்கள் |
| கோதுமை தவிடு (Flakes) | 2 மெட்ரிக் டன்கள் |

குறிப்பிடப்படும் விலை ஒப்பங்கள், கோணி, சேருமிடம் (Destination) எல்லா வரிகள் சேர்த்து மெட்ரிக் டன் ஒன்றுக்கு விலை குறிப்பிடப்படவேண்டும். மேற்படி சப்ளைகள் மொத்தமாகவோ அல்லது அவ்வப்போது இடைவெளிகளிலோ இரு சாராரும் ஒப்புக்கொண்ட வகையில் இருக்கவேண்டும்- விலை ஒப்பங்களுடன் பொருள்களின் மாதிரிகள் (Samples) சிறு அளவில் அனுப்பப்பட வேண்டும்.

davp 539 (121) 79

அகில இந்திய சுற்றுலா வர்த்தகப் பொருட்காட்சி - 1980
சென்னை
1979 டிசம்பர் 22 முதல்
1980 பிப்ரவரி 18 வரை

## தனி உரிமை ஏல விளம்பரம்

(1) பாப்கார்ன், சிப்ஸ், பட்டாணி, சிகரெட், பீடி, பஞ்சு மிட்டாய், கரும்புச்சாறு, பழக்கடை, காபி டீ, சோடா, கலர், பானங்கள், இளநீர், பானி பூரி, பஜ்ஜி, அப்பளம், முதலியன விற்பனை செய்ய தனி உரிமை.
(2) சைக்கிள், கார், ஸ்கூட்டர் முதலிய வாகனங்கள் நிறுத்தும் இட உரிமை.
(3) ராட்சத சக்கரம், ரங்கராட்டினம் முதலியன அமைத்து நடத்தும் தனி உரிமை.
(4) அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட விளையாட்டுக்கள் (ஸ்கில் கேம்ஸ்) நடத்த தனி உரிமை.
(5) நிழற்பட நிலையம் நடத்த தனி உரிமை.
(6) பொருட்காட்சி மைதானத்திற்குள் ஒலிபெருக்கி மூலம் வர்த்தக விளம்பரம் செய்யவும், விளம்பர சுவரொட்டிகள், விளம்பர பலகைகள் வைக்கவும் தனி உரிமை.

மேற்கண்ட தனி உரிமை கடைகளுக்கான பகிரங்க ஏலம் 5-11-79 அன்று காலை 11·00 மணியளவில் அண்ணா சாலையில் உள்ள சுற்றுலா வளர்ச்சி அலுவலகத்தில் நடைபெறும். ஏலம் கேட்க முன் வைப்புத் தொகை ரூ. 1000-

முன் வைப்புத் தொகை செலுத்த கடைசி நாள் 2-11-79 மாலை 3-00 மணி.

மேலும் பிரத்தியேக சினிமா விளம்பர ஸ்லைடுகள் விளம்பரத் திரைப்படங்கள். திரைப்பட அரங்கத்தில் காண்பிக்கப்படும்.

விவரங்களுக்கு விண்ணப்பிக்கவும்:-

| | |
|---|---|
| | சிறப்பு அலுவலர் (பொருட்காட்சி) |
| தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்: | வளர்ச்சிக்கழகம் |
| சிவாலயா கட்டிடம், | தமிழ்நாடு சுற்றுலா |
| 16, கமாண்டர் இன்சிப்ரோடு, | 143, அண்ணா சாலை |
| சென்னை-8 | சென்னை-600 002 |
| தொலைபேசி எண் 89581 2 3 | தொலைபேசி எண் |
| தந்தி Tamil Tour | 88805 |

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வைசண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி.தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை-600004 ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி.